# கணிதம்

## தரம்

## 3

## பகுதி I



கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

# தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

**ஆனந்த சமரக்கோன்**
கவிதையின் பெயர்ப்பு.



**''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம்**
**நாட்டுக்கும் முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''**

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமுகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமுகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக்கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளுவதற்கு நீங்கள் பலம்பெற வேண்டும் என்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.

இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன் மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்களது ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை உங்களுக்கு அரசினால் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறிவரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகிற்கும் செயற்றிறன் மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.

அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக்கூடிய நிதிக்குப் பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.



**அகில விராஜ் காரியவசம்**
***கல்வி அமைச்சர்***

## முன்னுரை

நீங்கள் பிறந்திருப்பது இந்து சமுத்திரத்தின் நித்திலம் எனப் போற்றப்படக்கூடிய ஒரு நாட்டிலாகும். உங்கள் நாட்டை ஏனைய நாடுகளுடன் ஒப்பிடும்போது அது ஒரு சிறிய நாடாகத் தென்பட்டாலும் அதன் பெறுமதி விலைமதிப்பற்றதாகும். இவ்வாறான பெருமிதமிக்கதொரு மண்ணில் பிறந்துள்ள நீங்கள் அனைவரும் உண்மையிலேயே அதிஷ்டசாலிகள். மாணவர்களாகிய நீங்கள் அனைவரும் நன்கு கல்வி கற்று நற்குணமும் அறிவும் சக்தியும்மிக்க பிரசைகளாகி, எதிர்கால உலகை ஒளியூட்டுவீர்கள் என்பதே எமது ஒரே எதிர்பார்ப்பாகும். அந்த எதிர்பார்ப்பை அடைவதற்குக் கல்விக்கான சகல வசதிகளையும் இலவசமாக வழங்குவதற்கு அரசு நடவடிக்கை மேற்கொள்கின்றது. அதன் ஒரு கட்டமாகவே இந்நூலையும் அது உங்களுக்கு வழங்குகின்றது.

ஆரம்பப் பிரிவுப் பாடத்திட்டத்திற்கேற்ப இதுவரைக்கும் தரம் 1, 2, 3, 4 இற்கான புதிய பாடநூல்கள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. 2020 ஆம் ஆண்டு தரம் 5 இற்கான புதிய பாடநூல்களின் அறிமுகத்துடன் ஆரம்பப் பாடத்திட்ட மறுசீரமைப்பு எனும் இக்கட்டம் நிறைவு பெறுகின்றது. தரம் 1 முதல் தரம் 5 வரை கற்கும் ஆரம்பப் பிரிவு மாணவருக்காக அரசு ஏறக்குறைய 30 வகையான பாடநூல்களைத் தயாரித்து வழங்குகின்றது. இவ்விலைமதிப்பற்ற வளத்தினைப் பயன்படுத்தி வாழ்க்கையை வளமானதாக ஆக்கிக் கொள்வது உங்கள் அனைவரினதும் கடமையாகும்.

இப்பாடநூலை உங்கள் கைகளில் தவழச்செய்வதில் அர்ப்பணிப்புடன் செயலாற்றிய எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
2019.04.10

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## வழிகாட்டல்

**டபிள்யூ.ஏ. நிர்மலா பியசீலி**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் (அபிவிருத்தி)
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## இணைப்பாக்கம்

**அ. ஞானேஸ்வரன்**
அபிவிருத்தி உதவியாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## பதிப்பாசிரியர் குழு

**கலாநிதி. ஜீ.எம். வடநம்பி**
சிரேஷ்ட விரிவுரையாளர்
நில்வள தேசிய கல்வியற் கல்லூரி
வில்பிட, அக்குரஸ்ஸ

**வி. முரளி**
விரிவுரையாளர்
ஆசிரியர் மத்திய நிலையம்
புளியங்குளம்

**ஆர்.எம். கே.த சில்வா**
சிரேஷ்ட விரிவுரையாளர்
ஆரம்பக் கல்வித் திணைக்களம்
தேசிய கல்வி நிறுவகம்
மகரகம

**எச். எம். கே. ஏரத்**
சிரேஷ்ட விரிவுரையாளர்
ஹாபிடிகம தேசிய கல்வியற் கல்லூரி
மீரிகம

**கே.கே. ஹிமாலி பிரியதர்ஷனி**
உதவி ஆணையாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## எழுத்தாளர் குழு

**என். வாகீசமூர்த்தி**
ஓய்வு பெற்ற கல்விப் பணிப்பாளர்

**எஸ். மங்களேஸ்வரன்**
ஆசிரியர்
ஆமினா தேசிய பெண்கள் பாடசாலை
மாத்தளை

**கே. ஏ. சீ. சீ. முனிதாச**
அதிபர்
மே/ ஹோ புவக்பிடிய வடக்கு மகா வித்தியாலயம்
புவக்பிடிய

**ஏ. டீ. பீ. புஸ்பிக்க மிய**
பிரதி அதிபர்
மே/ஜய/ கொட்டாவ வடக்கு தர்மபால வித்தியாலயம்
ஹோக்கந்தர வீதி, பன்னிப்பிடிய

**டீ. ஏ. டீ. சீ. தசநாயக்க**
ஆசிரியர்
விசாகா கல்லூரி
கொழும்பு 5

**டீ. கே. ஏ. எஸ். யாப்பா**
ஆசிரியர்
மே/ஜய அனுலா வித்தியாலயம்
நுகேகொட

**எம். ஞானலதா**
ஆனந்தா வித்தியாலயம்
கொழும்பு 10

## மொழிப் பதிப்பாசிரியர்

**காந்திமதி துஷ்யந்தன்**
ஆசிரியர்
சைவ மங்கையர் வித்தியாலயம்
கொழும்பு 6

## சரவை பார்ப்பு

**ச. சிவபாலன்**
ஓய்வு பெற்ற ஆசிரியர்

## கணினி வடிவமைப்பு

**பரமநாதன் உஷாநந்தினி**
கணினி உதவியாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## முகப்பு அட்டையும் சித்திரங்களும்

**கே. ஏ. சமன் கலுபோவில**
மே/கம்/ அனுர மத்திய மகா வித்தியாலயம்
யக்கல

## பொருளடக்கம்

## நூலாக்கக் குழுவின் குறிப்பு

இற்றைப்படுத்தப்பட்ட புதிய ஆரம்பக் கலைத்திட்டம் 2016 ஆம் ஆண்டில் தரம் 1 இற்கு அறிமுகஞ் செய்யப்பட்டது. அதற்கேற்ப 2017 ஆம் ஆண்டுக்காகத் தரம் 2 கணிதப் பாடநூல் தயாரிக்கப்பட்டது. 2018 ஆம் ஆண்டுக்காகப் புதிய பாடத்திட்டத்திற்கு ஏற்பத் தரம் 3 கணிதப் பாடநூல் தயாரிக்கப்பட்டுள்ளது. ஆசிரியர்கள், ஆசிரியர் வழிகாட்டியில் குறிப்பிடப்பட்டுள்ள செயற்பாடுகளில் மாணவர்களை ஈடுபடச் செய்த பின்னர் மாணவர்களை பாடநூலில் உள்ள பயிற்சிகளில் ஈடுபடத்தக்கவாறு பாடநூலைத் தயாரித்தல் ஆக்கக் குழுவின் முக்கிய நோக்கமாகும்.

கற்றல் - கற்பித்தல் செயன்முறையினூடாகப் பெறும் அனுபவங்களை மேலும் உறுதிப்படுத்துவதற்கும் மாணவர்களை மதிப்பிடுவதற்கும் இங்கு இடம்பெறும் பயிற்சிகளைப் பயன்படுத்தலாம். ஆசிரியர் வழிகாட்டியின் மூலம் முன்வைக்கப்பட்டுள்ள கற்றல் - கற்பித்தல் செயன்முறையின் ஒழுங்குமுறைக்கேற்ப இங்கு பயிற்சிகள் இடம்பெறுகின்றன. இப்பாடநூலைப் பாடசாலையில் மாத்திரம் கையாள வேண்டிய அதேவேளை இந்நூலில் எளிய மொழியில் அறிவுறுத்தல்கள் வழங்கப்பட்டும் உதாரணங்கள் தரப்பட்டும் இருப்பதனால் பிள்ளைகள் பயிற்சிகளை எளிதாகச் செய்வர். எனினும் தேவையான சந்தர்ப்பங்களில் பிள்ளைகளுக்கு உதவுதல் ஆசிரியரின் பொறுப்பாகும்.

தரம் 3 கணிதப் பாடநூலின் முதற் பகுதி நூலாக அமைந்துள்ளது. மாணவர்கள் செயற்பாடுகளை அந்நூலிலேயே செய்யத்தக்கதாக அந்நூல் தயாரிக்கப்பட்டுள்ளது. இரண்டாம் பகுதியில் உள்ள பெரும்பாலான செயற்பாடுகளை மாணவர்கள் பயிற்சிப் புத்தகத்தில் எழுதிச் செய்யலாம்.

பிள்ளைகளின் அறிவிற்குக் கிட்டிய விதத்தில் சித்திரங்கள், உருக்கள், அட்டவணைகள், வரைபுகள் ஆகியனவற்றைச் சேர்த்து இந்நூல் தயாரிக்கப்பட்டிருப்பதனால் பிள்ளைகளிடம் சிறு வயதிற்கூடக் கணிதப் பாடத்தில் ஆர்வத்தை ஏற்படுத்திப் புதிய ஆக்கத் திறன்கள், பிரசினங்களைத் தீர்க்கும் திறன்கள், தொடர்பாடல் திறன்கள் போன்ற பல்வேறு திறன்களை விருத்திசெய்து அறிவும் பண்பும் மிக்க பிள்ளைகளை உருவாக்கலாம். நவீன உலகிற்குப் பொருத்தமான, ஆக்கத்திறன் மிக்க, அறிவுள்ள பிள்ளைகளை உருவாக்குவதற்கு இந்நூல் உதவுமென நம்புகிறோம்.

**நூலாக்கக் குழு**

# எண்ணுதல் 1

இரண்டு இரண்டாக எண்ணுவோம்.

**உதாரணம் :-** 

காதணிகளை எண்ணுங்கள்.

**2, 4, 6, 8, 10, 12**

**எல்லாமாக 12 காதணிகள் உள்ளன.**

இரண்டு இரண்டாக எண்ணி சப்பாத்துக்களின் எண்ணிக்கையைக் காண்போம்.



**சப்பாத்துக்களின் எண்ணிக்கை ................**

இரண்டு இரண்டாக எண்ணி பூக்களின் எண்ணிக்கையைக் காண்போம்.



**பூக்களின் எண்ணிக்கை .....................**

# 1 எண்ணுதல்

தேங்காய்களை இரண்டு இரண்டாக எண்ணி வட்டம் வரைவோம்.
தேங்காய்களின் எண்ணிக்கையைக் காண்போம்.



தேங்காய்களின் எண்ணிக்கை ................

**உதாரணம் :-**

ஐந்து ஐந்தாக எண்ணுவோம்.



**5, 10, 15, 20, 25**

**எல்லாமாக 25 வாழைப்பழங்கள் உள்ளன.**

ஐந்து ஐந்தாக எண்ணி கைவிரல்களின் எண்ணிக்கையைக் காண்போம்.



விரல்களின் எண்ணிக்கை ................

# எண்ணுதல்



*ஐந்து ஐந்தாக எண்ணி பூ இதழ்களின் எண்ணிக்கையைக் காண்போம்.*



**பூ இதழ்களின் எண்ணிக்கை ................**

*ஐந்து ஐந்தாக எண்ணி மாலையில் உள்ள பவளங்களின் எண்ணிக்கையைக் காண்போம்.*



**பவளங்களின் எண்ணிக்கை ...............**

# 1 எண்ணுதல்

**உதாரணம் :-**

பத்துப் பத்தாக எண்ணுவோம்.



**10, 20, 30, 40, 50**

**எல்லாமாக 50 இலைகள் உள்ளன.**

பத்துப் பத்தாக எண்ணி மரங்களில் உள்ள ஜம்புகளின் மொத்த எண்ணிக்கையைக் காண்போம்.



ஜம்புகளின் எண்ணிக்கை ...............

பத்துப் பத்தாக எண்ணி அடைப்புகளில் உள்ள இனிப்புகளின் மொத்த எண்ணிக்கையைக் காண்போம்.



இனிப்புகளின் எண்ணிக்கை ...............

# எண்ணுதல்



*பத்துப் பத்தாக எண்ணி பால்ரின்களின் எண்ணிக்கையைக் காண்போம்.*




**பால்ரின்களின் எண்ணிக்கை ..............**

*பத்துப் பத்தாக எண்ணி இறாக்கையில் உள்ள புத்தகங்களின் எண்ணிக்கையைக் காண்போம்.*



**புத்தகங்களின் எண்ணிக்கை ..............**

# 2 எண்கள் - 1

வெற்று அடைப்பினுள் எண்களை எழுதுவோம். வாசிப்போம்.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | | 7 | | | 10 |
| 11 | | | | | 16 | | | | 20 |
| | | 23 | | | | | 28 | | |
| | | | | 35 | | 37 | | | |
| | 42 | | | | | | | 49 | |
| | | | 54 | | | | | | |
| | 62 | | | | 66 | | | | 70 |
| 71 | | | | | | 77 | | | |
| | | | 84 | | | | | | 90 |
| | | 93 | | | | | | | 100 |

# எண்கள் - 1

2

எண்களில் எழுதுவோம்.

| | | | |
|---|---|---|---|
| பதின்மூன்று | 13 | நாற்பத்துமூன்று | |
| இருபத்தொன்பது | | தொண்ணூற்றைந்து | |
| ஐம்பத்தொன்று | | அறுபத்தேழு | |
| எழுபது | | முப்பத்துநான்கு | |
| எண்பத்தெட்டு | | நூறு | |

எண்பெயரை எழுதுவோம்.

| | | | |
|---|---|---|---|
| 18 | பதினெட்டு | 15 | |
| 27 | | 30 | |
| 44 | | 53 | |
| 69 | | 76 | |
| 82 | | 98 | |

# 2 எண்கள் - 1

வெற்றிடங்களை நிரப்புவோம்.

| | பத்துகள் | ஒன்றுகள் | எண் |
|---|---|---|---|
|  | 1 | 2 | 12 |
|  | ............. | ............. | ............. |
|  | ............. | ............. | ............. |
|  | ............. | ............. | ............. |

வெற்றிடங்களை நிரப்புவோம்.

| எண் | பத்துகள் | ஒன்றுகள் | எண் | பத்துகள் | ஒன்றுகள் |
|---|---|---|---|---|---|
| 25 | | | 13 | | |
| 37 | | | 48 | | |
| 61 | | | 92 | | |
| 56 | | | 84 | | |
| 80 | | | 99 | | |

**வெற்றிடங்களை நிரப்புவோம். வாசிப்போம்.**

(1) பத்துகள் 2 ஒன்றுகள் 6 → எண் 26

(2) பத்துகள் 4 ஒன்றுகள் 1 → எண் ..........

(3) பத்துகள் 8 ஒன்றுகள் 0 → எண் ..........

(4) பத்துகள் 3 ஒன்றுகள் 9 → எண் ..........

(5) பத்துகள் 5 ஒன்றுகள் 8 → எண் ..........

**பொருத்தமாக இணைப்போம்.**

| | | |
|---|---|---|
| 64 | பத்துகள் 7 | ஒன்றுகள் 6 |
| 76 | பத்துகள் 4 | ஒன்றுகள் 9 |
| 52 | பத்துகள் 6 | ஒன்றுகள் 4 |
| 30 | பத்துகள் 5 | ஒன்றுகள் 2 |
| 49 | பத்துகள் 3 | ஒன்றுகள் 0 |

(64 → பத்துகள் 6)

# எண்கள் - 1

பத்துகளையும் ஒன்றுகளையும் கொண்டு வகைகுறிப்போம்.

**உதாரணம் :** 12 ⟶ 10 + 2

(1) 23 ⟶ 20 + ........

(2) 64 ⟶ ........ + 4

(3) 82 ⟶ 80 + ........

(4) 70 ⟶ 70 + ........

(5) 97 ⟶ ........ + ........

பத்துகளுக்கும் ஒன்றுகளுக்கும் ஏற்ப எண்ணை எழுதுவோம்.

**உதாரணம் :** 10 + 8 ⟶ 18

(1) 30 + 5 ⟶

(2) 40 + 3 ⟶

(3) 50 + 7 ⟶

(4) 80 + 9 ⟶

(5) 90 + 0 ⟶

உருவில் காட்டப்பட்டுள்ள கோல்களையும் குற்றிகளையும் கொண்டு எண்ணை எழுதுவோம்.



| பத்துகள் | ஒன்றுகள் |
|---|---|
| ..2...... | ..5...... |

..20..... + ..5...... → ..25......



| பத்துகள் | ஒன்றுகள் |
|---|---|
| ........ | ........ |

........ + ........ → .........



| பத்துகள் | ஒன்றுகள் |
|---|---|
| ........ | ........ |

........ + ........ → .........



| பத்துகள் | ஒன்றுகள் |
|---|---|
| ........ | ........ |

........ + ........ → .........

# 3 எண்களைக் கூட்டல் – 1

**12** உடன் **25** ஐக் கூட்டுவோம்.




| | | |
|---|---|---|
| $\begin{array}{rr} & 1\ \ 2 \\ + & 2\ \ 5 \\ \hline & \end{array}$ | ஒன்றுகளைக் கூட்டல் → | $\begin{array}{rr} & 1\ \ 2 \\ + & 2\ \ 5 \\ \hline & 7 \end{array}$ |
| | பத்துகளைக் கூட்டல் → | $\begin{array}{rr} & 1\ \ 2 \\ + & 2\ \ 5 \\ \hline & 3\ \ 7 \end{array}$ |

கூட்டுவோம். விடையை எழுதுவோம்.

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 1 1 | 3 4 | 1 5 | 2 2 | 2 0 |
| + 1 7 | + 2 3 | + 3 0 | + 5 5 | + 1 9 |
| ____ | ____ | ____ | ____ | ____ |

| (6) | (7) | (8) | (9) | (10) |
|---|---|---|---|---|
| 3 0 | 2 3 | 4 5 | 6 3 | 2 5 |
| + 5 0 | + 2 3 | + 5 4 | + 3 6 | + 3 4 |
| ____ | ____ | ____ | ____ | ____ |

# எண்களைக் கூட்டல் - 1

3

| (11) | (12) | (13) | (14) | (15) |
|---|---|---|---|---|
| 5 5 | 2 4 | 8 0 | 3 6 | 2 1 |
| + 4 2 | + 6 2 | + 1 0 | + 4 3 | + 7 8 |
| ____ | ____ | ____ | ____ | ____ |

| (16) | (17) | (18) | (19) | (20) |
|---|---|---|---|---|
| 6 1 | 1 8 | 3 7 | 4 3 | 8 0 |
| + 1 4 | + 3 1 | + 1 2 | + 4 1 | + 1 8 |
| ____ | ____ | ____ | ____ | ____ |

கூட்டுவோம்.

**உதாரணம் :-** 2 4 + 3 5 = **5 9**

(1) 6 6 + 2 2 = .............

(2) 3 2 + 5 1 = .............

(3) 4 3 + 4 3 = .............

(4) 8 1 + 1 7 = .............

(5) 2 0 + 6 0 = .............

# 3 எண்களைக் கூட்டல் - 1

கூட்டி விடையை எழுதுவோம்.

(1) 40 + 35 = ............
(2) 22 + 20 = ............
(3) 35 + 14 = ............
(4) 25 + 10 = ............
(5) 40 + 50 = ............
(6) 12 + 45 = ............
(7) 53 + 35 = ............
(8) 28 + 41 = ............
(9) 75 + 13 = ............
(10) 81 + 18 = ............

எண்களைக் கூட்டி வெற்று அடைப்புகளை நிரப்புவோம்.

உதாரணம் :-

79
33 46
11 22 24

11 + 22 = 33

(1)
☐
☐ ☐
20 12 25

(2)
☐
☐ ☐
22 11 33

(3)
☐
☐ ☐
43 21 10

வசனங்களில் எழுதிக் கூட்டுவோம்.

உதாரணம் :-

ஒரு கூடையில் 12 மாங்காய்களும் 16 மாம்பழங்களும் உள்ளன. கூடையிலுள்ள மாங்காய்களினதும் மாம்பழங்களினதும் மொத்த எண்ணிக்கை யாது ?

அதனை இவ்வாறு காண்போம்.

| | | |
|---|---|---|
| மாங்காய்களின் எண்ணிக்கை | = | 1 2 |
| மாம்பழங்களின் எண்ணிக்கை | = | 1 6 |
| மொத்த எண்ணிக்கை | = | 2 8 |

# எண்களைக் கூட்டல் - I



(1) ஒரு கிளையில் 23 பூக்களும் வேறொரு கிளையில் 20 பூக்களும் உள்ளன. இரு கிளைகளிலும் எத்தனை பூக்கள் உள்ளன?

| | | |
|---|---|---|
| ஒரு கிளையில் உள்ள பூக்களின் எண்ணிக்கை | = | 2 3 |
| வேறொரு கிளையில் உள்ள பூக்களின் எண்ணிக்கை | = | 2 0 |
| இரு கிளைகளிலும் உள்ள பூக்களின் எண்ணிக்கை | = | ______ |

(2) ஒரு பெட்டியில் 43 சிவப்பு முட்டைகளும் 25 வெள்ளை முட்டைகளும் உள்ளன. பெட்டியிலுள்ள முட்டைகளின் மொத்த எண்ணிக்கை யாது?

| | | |
|---|---|---|
| சிவப்பு முட்டைகளின் எண்ணிக்கை | = | 4 3 |
| வெள்ளை முட்டைகளின் எண்ணிக்கை | = | 2 5 |
| பெட்டியிலுள்ள முட்டைகளின் மொத்த எண்ணிக்கை | = | ______ |

(3) ரேவதியின் வகுப்பில் 30 பிள்ளைகள் உள்ளனர். கீதாவின் வகுப்பில் 40 பிள்ளைகள் உள்ளனர். இரு வகுப்புகளிலும் உள்ள பிள்ளைகளின் மொத்த எண்ணிக்கை யாது?

| | | |
|---|---|---|
| ரேவதியின் வகுப்பில் உள்ள பிள்ளைகளின் எண்ணிக்கை | = | .......... |
| .................................................................................. | = | .......... |
| .................................................................................. | = | ______ |

(4) முதலாம் நிரையில் 54 கொடிகள் உள்ளன. இரண்டாம் நிரையில் 45 கொடிகள் உள்ளன. இரு நிரைகளிலும் உள்ள கொடிகளின் மொத்த எண்ணிக்கை யாது?

| | | |
|---|---|---|
| .................................................................................. | = | .......... |
| .................................................................................. | = | .......... |
| .................................................................................. | = | ______ |

# 4 நீளத்தை அளத்தல் – 1

வகுப்பறையில் உள்ள பொருள்களின் நீளத்தை விருப்பமான அலகுகளில் அளப்போம்.



| அளக்கும் பொருள் | பென்சிலினால் | தீக்குச்சியினால் | பானக் குழாயினால் |
|---|---|---|---|
| (1) மாணவர் மேசையின் நீளம் | | | |
| (2) கணிதச் செயல்நூலின் நீளம் | | | |
| (3) ஆசிரியர் மேசையின் நீளம் | | | |
| (4) | | | |
| (5) | | | |

★ விருப்பமான அலகு மாறும்போது கிடைக்கும் அளவுகளின் தடவைகளின் எண்ணிக்கை மாறும்.

# நீளத்தை அளத்தல் - 1 | 4




ஆகவே நீளத்தை அளப்பதற்கு ஒரு நியம அலகு தேவை

1 மீற்றர்



● நீளத்தை அளப்பதற்கான நியம அலகு மீற்றர் ஆகும்.

அளக்கும் பொருள்களை எழுதுவோம். மீற்றரில் நீளத்தை அளப்போம்.

| அளக்கும் பொருள் | நீளம் |
|---|---|
| (1) வகுப்பறையின் நீளம் | 5 மீற்றரிலும் சிறிது கூட |
| (2) ஆசிரியர் மேசையின் அகலம் | ஒரு மீற்றரிலும் சிறிது குறைவு |
| (3) | |
| (4) | |
| (5) | |
| (6) | |

# 5 எண்களைக் கழித்தல் - 1

நீக்கும் எண்ணிக்கையைக் கழித்து விடையை எழுதுவோம்.

உதாரணம் :-



$$\begin{array}{r} 12 \\ -\ \ 6 \\ \hline 6 \\ \hline \end{array}$$

(1).



$$\begin{array}{r} 18 \\ -\ \ 9 \\ \hline \\ \hline \end{array}$$

(2).



$$\begin{array}{r} 13 \\ -\ \ 7 \\ \hline \\ \hline \end{array}$$

(3).



$$\begin{array}{r} 15 \\ -\ \ 6 \\ \hline \\ \hline \end{array}$$

(4).



$$\begin{array}{r} 16 \\ -\ \ 8 \\ \hline \\ \hline \end{array}$$

(5).



$$\begin{array}{r} 14 \\ -\ \ 5 \\ \hline \\ \hline \end{array}$$

(6).



$$\begin{array}{r} 11 \\ -\ \ 4 \\ \hline \\ \hline \end{array}$$

# எண்களைக் கழித்தல் – 1



கழிப்போம். விடை எழுதுவோம்.

| (1) | (2) | (3) | (4) | (5) |
|---|---|---|---|---|
| 9 | 1 1 | 1 2 | 1 6 | 1 0 |
| – 5 | – 3 | – 4 | – 7 | – 5 |
| ______ | ______ | ______ | ______ | ______ |

| (6) | (7) | (8) | (9) | (10) |
|---|---|---|---|---|
| 1 3 | 1 4 | 1 5 | 1 7 | 1 2 |
| – 5 | – 6 | – 7 | – 8 | – 9 |
| ______ | ______ | ______ | ______ | ______ |

நடுவில் உள்ள எண்ணிலிருந்து சுற்றியுள்ள எண்களைக் கழித்து வெற்றிடங்களை நிரப்புவோம்.




வெற்று அடைப்புகளை நிரப்புவோம்.

(1) 8 – 1 = ☐

(2) 9 – 9 = ☐

(3) 5 – ☐ = 0

(4) 9 – ☐ = 9

(5) 11 – ☐ = 6

(6) ☐ – 8 = 2

(7) 18 – ☐ = 8

(8) 17 – ☐ = 0

# 5 எண்களைக் கழித்தல் – 1

வெற்று அடைப்புகளை நிரப்புவோம்.

17 – ___

___ – 2 16 – ___

9 – 1




15 – ___

___ – 5 ___ – 3

12 – ___

18 – 6

___ – 0 15 – ___

___ – 4




12 – ___

___ – 2 14 – ___

13 – ___

வாரத்தின் நாட்களை ஒழுங்கு முறையாக எழுதுவோம்.

.............................., செவ்வாய்க்கிழமை, புதன்கிழமை, ......................

..................................., சனிக்கிழமை, .....................................



ஜனவரி

| திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி | ஞாயிறு |
|---|---|---|---|---|---|---|
| 30 | 31 | | | | | 1 |
| 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 |
| 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 |
| 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 |

பெப்பிரவரி

| திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி | ஞாயிறு |
|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | 5 |
| 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
| 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 |
| 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 |
| 27 | 28 | | | | | |

# 6 காலம்

சரியான விடையை அடைப்பினுள்ளே எழுதுவோம்.

(1) வாரத்தின் முதலாம் நாள்

..........................................

(2) புதன்கிழமைக்கு அடுத்த நாள்

..........................................

(3) ஞாயிற்றுக்கிழமைக்கு முந்திய நாள்

..........................................

(4) செவ்வாய்க்கிழமைக்கு அடுத்த நாள்

..........................................

(5) புதன்கிழமைக்கு முந்திய நாள்

..........................................

(6) வாரத்தின் கடைசி நாள்

..........................................



# காலம் 6

பன்னிரண்டு மாதங்களின் பெயர்களை முறையே வாசிப்போம்.

| | | | |
|---|---|---|---|
| ஜனவரி | பெப்பிரவரி | மார்ச் | ஏப்ரல் |
| மே | யூன் | யூலை | ஓகஸ்ற் |
| செப்ரெம்பர் | ஒக்ரோபர் | நவெம்பர் | டிசெம்பர் |

உரிய மாதத்தின் பெயர்களை எழுதுவோம்.



சுதந்திர தின விழா
......................................மாதத்தில்
நடைபெறும்.



நத்தார்
......................................மாதத்தில்
கொண்டாடப்படும்.



புதிய ஆண்டில், பாடசாலை
................................ மாதத்தில்
ஆரம்பமாகும்.



புதுவருடப்பிறப்பு
......................................
மாதத்தில் கொண்டாடப்படும்.

# 6 காலம்

கடிகார முகத்தில் காணப்படும் நேரத்தை வாசிப்போம். எழுதுவோம்.



நேரம் ..12.00.. மணி



நேரம் .............. மணி



நேரம் .............. மணி



நேரம் .............. மணி



நேரம் .............. மணி



நேரம் .............. மணி

# காலம் 6

தரப்பட்டுள்ள நேரத்தைக் கடிகார முகத்தில் வரைந்து காட்டுவோம்.



நேரம் ஏழு மணி



நேரம் பன்னிரண்டு மணி



நேரம் பதினொரு மணி



நேரம் நான்கு மணி



நேரம் எட்டு மணி



நேரம் ஒரு மணி

# 7 பெருக்கல் – 1



ஒரு முயல் குட்டி

ஒன்றுக்கு இரண்டு காதுகள்



இரு முயல் குட்டிகள்

இரண்டுக்கு நான்கு காதுகள்



மூன்று முயல் குட்டிகள்

மூன்றுக்கு ஆறு காதுகள்



நான்கு முயல் குட்டிகள்

நான்குக்கு ............. காதுகள்



ஐந்து முயல் குட்டிகள்

ஐந்துக்கு ................ காதுகள்

# பெருக்கல் – 1

7

இரண்டின் பெருக்கல் வாய்பாட்டைப் பார்ப்போம்.
மனத்தில் இருத்தி இப்போது வாசிப்போம்.



1 × 2 = 2
ஒன்று தரம் இரண்டு இரண்டு



2 × 2 = 4
2 +2 = 4
இரண்டு தரம் இரண்டு நான்கு



3 × 2 = 6
2+2+2 = 6
மூன்று தரம் இரண்டு ஆறு



4 × 2 = 8
2+2+2+2 = 8
நான்கு தரம் இரண்டு எட்டு



5 × 2 = 10
2+2+2+2+2 = 10
ஐந்து தரம் இரண்டு பத்து



6 × 2 = 12
2+2+2+2+2+2 = 12
ஆறு தரம் இரண்டு பன்னிரண்டு



7 × 2 = 14
2+2+2+2+2+2+2 = 14
ஏழு தரம் இரண்டு பதினான்கு



8 × 2 = 16
2+2+2+2+2+2+2+2 = 16
எட்டு தரம் இரண்டு பதினாறு



9 × 2 = 18
2+2+2+2+2+2+2+2+2 = 18
ஒன்பது தரம் இரண்டு பதினெட்டு



10 × 2 = 20
2+2+2+2+2+2+2+2+2+2 = 20
பத்து தரம் இரண்டு இருபது

# 7 பெருக்கல் – 1

வெற்றிடங்களை நிரப்பி இரண்டின் பெருக்கல் வாய்பாட்டை உரத்து வாசிப்போம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | 1 | × 2 | = | ........... |
| (2) | 2 | × 2 | = | ........... |
| (3) | 3 | × 2 | = | ........... |
| (4) | ...... | × 2 | = | 8 |
| (5) | 5 | × ...... | = | 10 |
| (6) | 6 | × 2 | = | ........... |
| (7) | 7 | × ...... | = | 14 |
| (8) | ...... | × 2 | = | 16 |
| (9) | 9 | × 2 | = | ........... |
| (10) | ...... | × ...... | = | 20 |

விடை உள்ள டொமினோ அட்டையை இனங்கண்டு இணைப்போம்.



# பெருக்கல் - 1

வெற்று அடைப்புக்குப் பொருத்தமான எண்ணை எழுதுவோம்.

(1) 6 × 2 = ☐

(2) 9 × 2 = ☐

(3) ☐ × 2 = 10

(4) 8 × ☐ = 16

(5) 4 × ☐ = 8

(6) ☐ × 2 = 6

(7) 7 × 2 = ☐

(8) ☐ × ☐ = 8

(9)

| × | 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|---|
| 2 | 2 ............. | ............. | ............. | ............. | ............. |

(10)

| × | 6 | 7 | 8 | 9 | 10 |
|---|---|---|---|---|---|
| 2 | ............. | ............. | ............. | ............. | ............. |

# 8 திண்மங்கள்

திண்மங்களையும் வடிவங்களையும் இனங்காண்போம்.

| திண்மம் | வடிவம் |
|---|---|
|  சதுரமுகி |  சதுரம் |
|  கனவுரு |  செவ்வகம் |
|  நான்முகி |  முக்கோணி |
|  உருளை |  வட்டம் |

# திண்மங்கள்

வடிவத்திற்குரிய பெயரை எழுதுவோம்.





.............................. ..............................





.............................. ..................................

நிறந்தீட்டிய பகுதியின் வடிவத்தின் பெயரை எழுதுவோம்.



உரு 1



உரு 2



உரு 3



உரு 4

| உரு | வடிவத்தின் பெயர் |
|---|---|
| 1 | |
| 2 | |
| 3 | |
| 4 | |

# 8 திண்மங்கள்

பின்வரும் உருவில் உள்ள வடிவங்களை எண்ணி அடைப்பில் எழுதுவோம்.

| வடிவம் | எண்ணிக்கை |
|---|---|
| வட்டம் | |
| சதுரம் | |
| செவ்வகம் | |
| முக்கோணி | |



பின்வரும் உருக்களில் உள்ள வடிவங்களின் எண்ணிக்கையை எழுதுவோம்.



முக்கோணிகள் ..............



வட்டங்கள் ..............



சதுரங்கள் ..............



செவ்வகங்கள் ..............

# திண்மங்கள்

8

திண்மங்களுக்குரிய பெயரை இனங்கண்டு இணைப்போம்.



சதுரமுகி



நான்முகி



கோளம்



கனவுரு



உருளை

# 8 திண்மங்கள்

உருவைக் கொண்டு கீழே உள்ள அட்டவணையைப் பூரணப்படுத்துவோம்.




| திண்மத்தின் பெயர் | திண்மத்தின் வடிவம் காணப்படத்தக்க உருவின் எண் |
|---|---|
| சதுரமுகி | |
| கனவுரு | |
| கோளம் | |
| நான்முகி | |
| உருளை | |

# திண்மங்கள்






வடிவத்தைப் பார்த்துப் பெயரை எழுதுவோம்.



# 9 வகுத்தல் - 1

சமமாக வகுப்போம்.




தரப்பட்டிருக்கும் பழங்களை மீனாவுக்கும் மாலாவுக்கும் சமமாக வகுப்போம்.



| மீனாவுக்குக் கிடைத்த பழங்களின் எண்ணிக்கை ........... | மாலாவுக்குக் கிடைத்த பழங்களின் எண்ணிக்கை ........... |
|---|---|



| மீனாவுக்குக் கிடைத்த பழங்களின் எண்ணிக்கை ........... | மாலாவுக்குக் கிடைத்த பழங்களின் எண்ணிக்கை ........... |
|---|---|



| மீனாவுக்குக் கிடைத்த பழங்களின் எண்ணிக்கை ........... | மாலாவுக்குக் கிடைத்த பழங்களின் எண்ணிக்கை ........... |
|---|---|



| மீனாவுக்குக் கிடைத்த பழங்களின் எண்ணிக்கை ........... | மாலாவுக்குக் கிடைத்த பழங்களின் எண்ணிக்கை ........... |
|---|---|

# வகுத்தல் - 1 9

பழங்களைச் சமமாக வகுப்போம்.
மீதியை வேறாக வைப்போம்.

எல்லாமாக ஐந்து பழங்கள் உள்ளன
கொடுப்பதற்குச் சமமாக இரு கைகளிலும்
இரண்டு இரண்டாக எடுப்போம்.
மீதியாக ஒன்று




புத்தகங்களைச் சமமாக இருவருக்கும் வகுப்போம். அட்டவணையை நிரப்புவோம்.

| இருக்கும் புத்தகங்களின் எண்ணிக்கை | ஒருவருக்குக் கிடைக்கும் புத்தகங்களின் எண்ணிக்கை | மீதிப் புத்தகங்களின் எண்ணிக்கை |
|---|---|---|
|  | 3 புத்தகங்கள் | 1 புத்தகம் |
|  | ............ புத்தகங்கள் | ............ புத்தகம் |
|  | ............ புத்தகங்கள் | ............ புத்தகம் |
|  | ............ புத்தகங்கள் | ............ புத்தகம் |

# 9 வகுத்தல் - 1

தரப்படும் பொருள்களைச் சமமாக இரு குவியல்களாக வகுப்போம். அட்டவணையை நிரப்புவோம்.

| பொருள் | ஒரு குவியலில் உள்ள எண்ணிக்கை | எஞ்சியுள்ள எண்ணிக்கை |
|---|---|---|
|  | 1 | 0 |
|  | ................................ | ............................ |
|  | ................................ | ............................ |
|  | ................................ | ............................ |
|  | ................................ | ............................ |
|  | ................................ | ............................ |
|  | ................................ | ............................ |

# பின்னங்கள் 10

மாமாவுடன் சந்தைக்குச் சென்ற மோகன் ஒரு தோடம்பழத்தை வாங்கினான்.



மாமா அத்தோடம்பழத்தைச் சமமாக இரு துண்டுகளாக வெட்டினார்.



ஒரு துண்டு, தோடம்பழத்தின் அரைவாசியாகும்.



தோடம்பழத்தின் இரு அரைவாசிகளிலிருந்து ஒரு தோடம்பழம் கிடைக்கின்றது.

பொருத்தமான அரைவாசிகளை இணைப்போம்.



# பின்னங்கள்

அரைவாசியை இனங்காண்போம்.



ஓர் அரைவாசியை நிறந் தீட்டுவோம்.

(1) (2) (3)

(4) (5) (6)



அரைவாசியை வகை குறிக்கும் உருவின் கீழ் கோட்டினை வரைவோம்.



# பின்னங்கள்

**ஒரு கேக் நான்கு நண்பர்களிடையே சமமாக வகுக்கப்பட்டது.**



**கால்வாசி**

- ஒரு கேக்கிலிருந்து நான்கு சம துண்டுகள் கிடைக்கின்றன.
- ஒரு துண்டு, கேக்கின் கால்வாசி ஆகும்.

*இரு கால்வாசித் துண்டுகளிலிருந்து அரைவாசிக் கேக் கிடைக்கின்றது.*

*கால்வாசி*

*கால்வாசி*



*அரைவாசி*

*நான்கு கால்வாசித் துண்டுகளிலிருந்து ஒரு கேக் கிடைக்கின்றது.*



# பின்னங்கள்

கால்வாசிகளை இனங்காண்போம்.



ஒரு கால்வாசிக்கு நிறந் தீட்டுவோம்.



(1)



(2)



(3)



(4)



(5)



(6)



(7)



(8)



(9)

# திசைகள் 11

வலக்கையையும் இடக்கையையும் இனங்காண்போம்.




அறிவுறுத்தல்களுக்கு ஏற்ப வரைவோம்.




| கீதா | நிசார் | தேவி |
|---|---|---|
| வலக்கையில் ஒரு பூ<br>இடக்கையில் ஒரு கொடி | வலக்கையில் ஒரு பந்து<br>இடக்கையில் ஒரு மாம்பழம் | வலக்கையில் ஒரு பலூன்<br>இடக்கையில் ஒரு குடை |

உருக்களைப் பார்த்து வெற்றிடங்களை நிரப்புவோம்.

(1) மூன்று நண்பர்களில் நடுவில் இருப்பவர் .................................. ஆவார்.

(2) நிசாரின் இடக்கைப் பக்கத்தில் .................................. இருக்கிறார்.

(3) நிசாரின் வலக்கைப் பக்கத்தில் .................................. இருக்கிறார்.

(4) .................................. இடக்கைப் பக்கத்தில் நிசார் இருக்கிறார்.

(5) தேவியின் வலக்கைப் பக்கத்தில் ....................., .....................ஆகியோர் இருக்கின்றார்கள்.

